# பக்தியின் சரிதை

## 1. பக்தியின் சரிதை

**கா**ளிதாசன் விக்கிரமோர் வசீயத்தின் முதல் சுலோகத்தில் ஈசுவரனுடைய தன்மையை வெகு சுருக்கமாகவும் அழகாகவும் வர்ணிக்கிறார். மூன்று லோகங்களிலும் வியாபித்து நிற்கும் புருஷன் என்று வேதாந்தத்தில் விவரிக்கப்படுகிறார் ஈசுவரன்; உறுதியான பக்தி யோகத்தின் மூலம் எவகு சுலபமாகவும்அறியப்படுகிறார் என்று அந்த மகாகவி சொல்லுகிறார்.

**வே**தாந்தமாகிய உபநிஷத்துக்கள் தாம் முதன் முதலில் கடவுளுடைய நிர்க்குணத் தன்மையைத் தோற்றுவித்தன; அடுத்தாற் போல அவற்றின் சாரமாகவும் விளக்கமாகவும் ஏற்பட்ட பகவத் கிதைதான் ஈசுவரனை ஸகுணம், நிர்க்குணம் என்ற இரண்டு முறைகளிலும் தெளிவாக வர்ணித்துக் காட்டிற்று. அதிலிருந்து மேலான வேதாந்த வியாக்கியானங்களும் உண்டாயின. ஆதி சங்கரரைப் போன்ற தத்துவ தரிசிகள் ப்ரஸ்தான த்ரயம் என்பவற்றில் அதையும் ஓர் ஆதாரமாகக் கொண்டு பாஷ்யங்கள் எழுதி மதஸ்தாபனம் செய்தார்கள். பிற்காலத்தில் (ஏன், சங்கரர் காலம் முதலே) தோன்றின பக்தர்களும் கீதையைத் தான் மூலமாகக்கொண்டார்கள். எனவே, கீதை நிகரற்ற முறையில் வேதாந்த யோகம், பக்தி யோகம் இரண்டிற்கும் ஆதர்சக் கிரந்த மாயிற்று.

**ச**ங்கராச்சார்யருடைய அத்வைதக் கொள்கையின் பகுதியாகவும் ஸகுணோபாசனை முறையாகவும் பக்தி மார்க்கம் முதன் முதலில் தலையெடுத்தது. நிர்க்குணப் பிரம்மதத்தைப் பற்றிச் சித்தாந்தம் செய்து பரமா சார்யரே சௌந்தர்யலஹரி, லலிதா த்ரிசதி வியாக்கியானம் முதலியவற்றை இயற்றிப் பக்தி மார்க்கத்தையும் வகுத்தார் அது இன்றும் வழக்கில் இருக்கிறது. ராஜயோகியான சதாசிவேந்திர சரஸ்வதி பக்திரசம் ததும்பும் பல கீர்த்தனைகளைப் பாடினார். அத்வைதக் கொள்கையில் ஈடுபட்ட சுவாமி விவேகானந்தர் ராமகிருஷ்ண முனிவரின் பக்திப் பரவசத்தில் ஈடுபட்டார்.

**ஸ**குணோபாசனைதான் பக்தியோகத்திற்கு அடிப்படை. அனிதனுடைய மனம் சுத்த நிர்க்குண வாதத்தில் எவ்வளவு திருப்தி மடைந்த போதிலும் அவனுடைய உள்ளத்தின் பெருக்கத்திற்கு அதில் இடமில்லை ஞானத்தின் மூலம் ஏற்படும் பிரம்மைக்கியம் மனிதனுடைய இந்திரியங்களையும் அவற்றால் நிறைவுபெறும் உள்ளத்தையும் நிராகரிக்கின்றது; அவற்றைத் தாற்காலிகமானவை என்றும், ஏமாற்றம் அளிப்பவை என்றும் தள்ளி விடுகிறது. பக்தியில் கிரியைகளின் மூலம் ஏற்படும் சமாதியும் பரவசமும் இந்திரியங்களையும் உள்ளத்தையும் உத்க்ருஷ்டமாகச் செய்து விடுகின்றன. சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம்-எல்லாவற்றிற்கும், ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டவுடன் வாழ்க்கையை மீறிய விரிவு ஒன்று ஏற்படுகிறது. ஸர்வம் க்ருஷ்ணார்ப்பணமஸ்து என்ற பற்றற்ற தியாக புத்தியில் செயல்கள் யாவற்றையும் தன்னுடையவை அல்ல என்று மனிதன் செய்தால் இந்திரிய சேஷ்டைகளுக்கும் மனித சுபாவத்திற்குமே புதுப்பொருள் ஏற்படுகிறது. பக்தி என்ற உள்ள நெகிழ்ச்சியில் பரிபூரணமாக ஈடுபட்டுவிட்டால் எல்லாம் ஈசுவர சாந்தித்தியம் பெற்று விடுகின்றன.

**இ**ந்த மூலதாரமான உண்மையின் விளக்கந்தான் ஸ்ரீ கிருஷ்ண சைதன்யருடைய வாழ்க்கை என்று சொல்லிவிடலாம். அதன் முற்பகுதியில் அவர் வாதத்தின் மோகத்திலும், அறிவின் மமதையிலும் மூழ்கி இருந்தார்; பிற்பகுதியில் தம்மையே இழந்து பக்திப் பரவசமானார். ஆனால் பிறந்தது முதலே அவருக்குப் பரவசமெய்தும் சுபாவந்தான்; படிப்பால் அது தடைபட்டுவிட்டது. கயையில் கதாதர பாதங்களைப் பார்த்த சமயம் முதல்தான் திடீரென்று அவர் உள்ளம் அறிவை வென்று மேலெழுந்து அருக்கு உண்மையை விளக்கிற்று அப்பொழுதுதான் அவருக்கு விசுவரூப தரிசம் ஆயிற்று. அன்றே தம்மை மறந்தார்.

**வை**ஷ்ணவ பக்திமார்க்கம்அவருக்கு முன்பே இருந்தது. ஜயதேவர் என்ற வங்கதேசக்கவி பக்தியோகத்தில் மெய்ம் மறந்து ஈடுபட்டவராய் வடமொழியில் அழகும் சொற் சிறப்பும் வாய்ந்து பரவசமூட்டும் கீதகோவிந்தத்தைப் பாடினார். சண்டிதஸர், வித்யாபதி முதலிய கவிகளும் வைஷ்ணவ பக்தி முறையில் பாடல்கள் பாடினார்கள். ஆனால் கௌரசுந்தரர் என்ற சைதன்யர் தோன்றித்தான் நாம சங்கீர்த்தனத்தின் பெருமையைத் தோற்றுவித்தார் அவர்தாம் முதல் முதலாக வாழ்க்கையையே பெருத்த பக்திப் பரவச சரித்திரமாகச் சமைத்துக்காட்டினார்

## 2. பக்தியின் பிறப்பு வளர்ப்பு

பக்தி என்ற சொல் பஜ் என்ற வடமொழி மூலத்திலிருந்து வந்தது. அதனாலேயே அதனுடைய முக்கியமான சாதனம் பஜனை என்று தெரிகிறது. சாதாரணமாக நாம் அதைக் கடவுள் நினைப்பு என்ற பொருளில் உபயோகிக்கிறோம். மாத்ரு பக்தி, பித்ரு பக்தி, தேச பக்தி, குரு பக்தி என்பனவெல்லாம் ஈடுபாடு என்ற முறையில் ஏற்பட்டவைதாம்.

பக்தி என்பது ஒரு காலும் வெறும் தத்துவமன்று; அது காரியக்கிரமம். பக்தி என்பது கிரியை. மனம், வாக்கு, காயம்-மூன்றின் செய்கைகளிலும் பிறப்பது. ஆதியில் வேதரிஷிகள் ரிக்குள் பாடி, யாகங்களையும், ஹோமங்களையும் செய்து, இந்திரன், வருணன், அக்கினி, வாயு, சூரியன், சந்திரன் முதலிய தேவதைகளைப் பஜித்தார்கள். ஸம்ஹிதை, பிராம்மணங்கள் காலம் முழுவதும் கிரியைதான் முக்கியமாக இருந்தது. உபநிஷத்துக்கள் உதித்த பிறகுதான் கிரியைகளுக்கு மேலானது ஞானம் என்ற எ்கை ஏற்பட்டது. வேதாந்தத்தில் ஞானத்திற்கு ஏற்பட்ட உயர்வில் செயலே குறைந்துவிட்டது. அதற்குப் பிறகு அந்த நிலையில் இறுதியில், செயலற்ற தன்மையின் எதிர்ப்பாகத்தான் பௌத்த சித்தாந்தம் கிளம்பிற்று. அதன் கொள்கையின்படி வெறும் செயல்தான் வாழ்க்கை. வேதாந்தத்தின் ஞான மார்க்கத்தை வாழ்க்கையில் பயன்படாத தத்துவார்த்தம் என்று அது கண்டித்தது. யாகம் முதலிய சடங்குகளின் மூலம் நிர்யணயமான வேதத்தின் கர்ம மார்க்கத்தையும் அது நிராகரித்தது. தன்னலமற்ற பரோபகாரச் செயல்களே வாழ்க்கையின சங்கிலித் தொடர் என்று புத்தர் பிரசாரம் செய்தார். அது ஒரு விதமான நிரீசுவர வாதமாக ஆரம்பித்து எங்கோ போய் நின்றது

அதன் பிறகுதான் ஆதி சங்கரர் தோன்றி மறுபடியும் வேதப் பிரமாணமான சித்தாந்தத்தைத் தோற்றுவித்தார். அத்வைதம் என்ற தமது கொள்கையில் ஞான மார்க்கத்திற்கும் கர்ம மார்க்கத்திற்கும் ஒரு பிணைப்பு ஏற்படுத்திக் கடவுளை நிர்க்குணமுறை, ஸகுண முறை இவ்விரண்டு விதங்களிலும் உபாசனை செய்யலாம் என்று எடுத்துக்காட்டினார். ஞானமும் பக்தியும் பரஸ்பரத் தொடர்பு கொண்டவைதாம். அவற்றிற்கிடையே விரோதம் கிடையாது என்ற உண்மையைச் சங்கரர்தாம் முதல் முதலில் விளக்கி மதத்தைப் பரப்பினார்.

அவர் காலத்திலிருந்தான் பக்தி இயக்கமும் பிறந்து வளர ஆரம்பித்தது. முதலில் சிவபக்தி இயக்கமும் சக்தி உபாசனையுமே வலுத்தன. பகவத் கீதையின் பெருமையாலும், பாகவதத்தின் சிறப்பாலும் பிறகு கிருஷ்ணாவதாரத்தின் அழகு, மக்கள் மனத்தைச் சுலபமாகக் கவர்ந்தாலும் சிருங்கார ரஸத்தின் மூலமாக அதில் இன்பப் பெருமை விளங்கியதாலும் வைஷ்ணவ பக்தி வெகு சீக்கிரமாகப் பரவலாயிற்று. ராமாநுஜர் விசிஷ்டாத்வைச் (வைஷ்ணவ) சித்தாந்தத்தைத் தோற்றுவித்ததும் அது பிரபலமாகிவிட்டது.

சிவபக்தி இயக்கத்தைக் காட்டிலும் வைஷ்வ பக்தி இயக்கம் நாட்டில் அதிகமாக வேர்கொண்ட காரணம், வைஷ்ணவத்தில் வாழ்க்கையில் தவிர்க்க முடியாமல் இருக்கும் காம உணர்ச்சியைச் சாதனமாகக் கொண்டு அதைப் பரமாக மாற்றி பரவசம் கொள்ள சாதனமாகக் கொண்டு அதைப் பரமாக மாற்றி பரவசம் கொள்ள வசதிகள் இருப்பதுதான். சைவத்திலும் அது மாதிரியான நாயக நாயகி பாவம் இல்லாமலில்லை. ஆனால் பிற்காலத்தில்தான் அது விருத்தியாயிற்று. முதலில் பாகவதத்தின் கதை, கிருஷ்ணனுடைய லீலைகள், மக்கள் மனத்தைக் கவர்ந்த மாதிரி வேறெதுவும் கவரவில்லை. அதையொட்டி விஷ்ணுவின் மற்றோர் அவதார சரித்திரமான ராம கதையும் பக்தி இயக்கத்திற்கு இன்றியமையாத மூலமாக அமைந்தது

பக்தியின் லட்சணங்களை அக்கக்காகப் பிரித்து ஆராய்ந்து விபரீதமான கோட்பாடாக ஆக்கிவிட்டார்கள், பின்னால் மதப்பித்துக்கொண்டவர்கள். ஆனால் அதனுடைய சில முக்கியமான அம்சங்களை இங்கே குறிப்பிடுவது உபயோகமாக இருக்கும். ரதி எனப்படும் அநுபவத்தின் இறுதியில் தோன்றும் ரஸம் பக்தி. அதற்குத் துணைபுரிவன நான்கு. விபாவம் என்ற நிலை; அநுபாவம் என்ற உணர்ச்சி; ஸாத்விகம் என்ற இயற்கையான உணர்ச்சிப் போக்கு; வ்யபிசாரகம் என்ற தாற்காலிகமான வேகம்.

விபாவம் என்ற நிலை இரண்டு அம்சங்களைக் கொண்டது. ஆலம்பனம் என்ற காரணமும், உத்தீபனம் என்ற கிளர்ச்சியூட்டும் கருவியும் அந்நிலை ஏற்படத் தேவையானவை ஆலம்பனத்திற்குக் கிருஷ்ணனும், கிருஷ்ண பக்தனும் காரணங்கள்; அவர்களடைய குணங்கள் உத்தீபனம் என்ற கிளர்ச்சியூட்டும் கருவிகள். இரண்டாவது துணையான அநுபவத்திற்கு அலங்காரம், உத்பாஸ்வரம், வாசிகம் என மூன்று அம்சங்கள் உண்டு. அலங்காரமே மூன்று வகைப்பட்டது. அங்கஜம் - அங்கங்களிலிருந்து தோன்றுவது. அயத்நஜம் -பிரயத்தினமின்றி ஏற்படுபது; ஸ்வபரவஜம்-இயற்கையாகவே இருப்பது. உத்பாஸ்வரம் என்பது பெருமூச்சுவிடுதல், நர்த்தனம்

செய்தல் பரவசம் கொள்ளப் பூமியில் புரளுதல் முதலிய அடையாளங்கள் கொண்டது. வாசிகம் என்பது பேச்சு, புலம்பல் முதலிய சொல் சேஷ்டைகள் ரதி என்ற அநுபவம் ரஸமாகி மகா **பா**வமாகிறது.

**மு**க்கியமாகப் பரவசம் பக்தியின் லட்சணம். அது சமாதி போன்ற நிலை. ஞான மார்க்கத்தில் சமாதி எப்படியோ அப்படியே பக்தி மார்க்கத்திலும் பரவசம், ஜீவன் முக்தி நிலைக்கு அடையாளம். ஞானத்தில் உணர்ச்சியின் எல்லைக்குள் வராமல் தத்துவத்தின் தரிசனம் சமாதியைக் கொடுக்கிறது பக்தியில் உணர்ச்சியை ஒட்டிய சௌந்தர்ய அநுபவம் பரவசத்தை அளிக்கிறது. சமாதிக்கு விரக்தி சம்பந்தப்பட்ட தியானம் தேவை; பக்திக்கு ரக்தி (விஷய வாசனைகளின் மூலம் ஏற்படும் ரதி என்ற அநுபவம்) நிறைந்த தியானம் தேவை. ஞானம் வைராக்கியத்தை அடிப்படையாக் கொண்டது; பக்தி ராகத்தை (முக்கியமாக சிருங்கார பாவம் கொண்ட பிரேமையை) அடிப்படையாகக் கொண்டது. ஆனால் முடிவில் இரண்டு முறைகளின் மூலமும் ஏற்படும் அநுபவமும் ஒன்றே-அதுவே பரமானந்தம். அது ஞானிகளுக்கும் பக்தர்களுக்கும் பொதுவானதுதான். அதனாலேயே தலைசிறந்த ராஜயோகியான சதாசிவேந்திரர் பிரம்மத்தைப் பற்றியே பக்தி பரவசமான கீர்த்தனைகளைப் பாடினார் ஆதிசங்கரர் சௌந்தர்ய லஹரியை எழுதினார். ஞானிகள் எல்லோரும் பக்தர்கள்; பக்தர்கள் எல்லோரும் ஞானிகள்.

**ஆ**கையால்தான் பக்தியையும் யோகங்களிலேயே ஒரு முறையாகப் பக்தி யோக மென்று வகித்து விட்டார்கள். மூர்த்தி உபாசனைதான் அதன் முக்கியமான அம்சம். அத்வைத மார்க்கத்தில் ஈடுபட்ட சில பக்தர்கள் நாதோபாசனையைக் கொண்டார்கள். உபாசனை என்ற பதமே கூடியிருப்பது என்ற பொருள் கொண்டது; யோகம் என்ற வார்த்தைக்கும் அதே பொருள்தான்.

**யுஜ ஸமரத்யள இதி தரதோர் யோக ஸ்மாதி:**

என்று சதாசிவேந்திரர் பதஞ்ஜலி யோக ஸூத்ர விருத்தியில் பொருள் கூறுகிறார்.

பக்தி இயக்கம் ஆரம்பித்த வகை ஒரு விதம்; ஒது கடைசியில் வளர்ந்த வகையே வேறொன்று. முதலில் தனியான ஒரு பக்தனுடைய உள்ளப் பெருக்கின் மூலம் பாட்டாசு மட்டும் பக்தி ரஸபாவம் பெற்றது தேவார திருவாசகம் பாடிய சமயகுரவர்களும் ஆழ்வார்களும் முதலில் பாடியபொழுது கோஷ்டி கீதமாகத் தம் பாடல்கள் கையாளப்படும் என்று நினைத்திருக்கவே மாட்டார்கள். பின்புதான் பஜனை பத்ததியும் பாகவத சம்பிரதாயமும் ஏற்பட்டுப் பிரபலமாகப் பரவின.

**நா**ம சங்கீர்த்தனம் செய்வதிலேயே உள்ளம் பூரித்து மெய்ம்மறந்து பரவசமாகும் முறை வெகு காலமாகவே இருந்தாகத் தெரிகிறது. அதற்குச் சங்கீதமும் விசேஷமான சொல்லடக்குக் கொண்ட சாகித்தியமும் இன்றியமையா அம்சங்கள். ஆகையால் சில பக்தர்கள் உயர்ந்த கவிகளாகவும், சிலர் சிறந்த சங்கீத வித்துவான்களாகவும் இருந்திருக்கிறார்கள். இரண்டு கோஷ்டியினரிடமும் இரண்டு சக்திகளும் ஓரளவு இருந்தே தீர வேண்டும்; ஆனால் சுபாவ வேறுபாட்டாலும் கால தேச வர்த்தமான வேறுபாட்டாலும் சிலர் சங்கீதத்திலும் சிலர் சாகித்தியத்திலும் மேம்பட்டு விளங்குகிறார்கள். இவர்களைத் தவிர மேலும் சிலர் வெறும் பேரின்ப அநுபவங்கள் நிறைந்த ஜீவியங்களாகவே இருந்திருக்கிறார்கள்.

**ஸ்ரீ** கிருஷ்ண சைதன்யர் மூன்றாம் வகையைச் சேர்ந்தவர். அவர் சிறந்த சங்கீத வித்துவானும் அல்ல; சாகித்தியமும் அவர் செய்யவே இல்லை. அவரது வாழ்க்கை-அதன் பிற்பகுதி-சங்கீதமும் சாகித்தியமும் பொருள் கொள்ளும் ஒரு பெரும் பக்தி வெள்ளத்தின் பெருக்கு. அநுபவங்களையும் திவ்விய உணர்ச்சிகளையும் அவர் பெற்றுத் தம் நினைவற்றுப் போனதால் சங்கீதமோ சாகித்தியமோ வெளிவர நேரமில்லை எந்நேரமும் நாம சங்கீர்த்தனத்தில் அவர் லயித்துப் போயிருந்தார். அதுதான் அவரைத் திவ்விய தரிசனங்கள் செய்ய இட்டுச் சென்று தாரகமாக இருந்தது.

**ஹரே க்ருஷ்ண, ஹரே க்ருஷ்ண ,**
**க்ருஷ்ண க்ருஷ்ண, ஹரே !**
**ஹரே ராம ஹரே ராம ,**
**ராம ராம , ஹரே, ஹரே !**

ஹரி நாமந்தான் பிறவிப் பெரும் பிணிக்கு அவர் கண்டறிந்த அருமருந்து, தனி மருந்து.

## 3. நிஷ் காம கர்மமும் அநந்ய சிந்தையும்

பக்தி மார்க்கத்திற்கு உதவியான நூல்கள் இரண்டு என்பதை முன்பே குறித்தாகிவிட்டது அவை பாகவதமும், பகவத் கீதையுமே. அடுத்த படிதான் ராமாயணமும் சிவபரமான புராணங்களும், முன்பு சொன்னது போல வைஷ்ணவ முறையில்தான் இயக்கம் வெகுவாக வலுத்து இந்தியா முழுவதும் பரவியிருக்கிறது ஆகையால், பக்தி மார்க்கத்தை விளக்க நாம் வைஷ்ணவ சம்பிரதாயத்தையே அதிகமாக ஆராய்ச்சி செய்ய வேண்டியிருக்கிறது.

பாகவதத்தில் கிருஷ்ணனின் பாலியம் முதல் துவாரகையில் அவன் ஆண்டது வரையில் புரிந்த லீலைகள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. பாரதி எழுதினது போல், கண்ணன் தீராத விளையாட்டுப் பிள்ளையாகவும், காதலனாகவும், தோழனாகவும், அரசனாகவும், சேவகனாகவுங்கூட, அடியார்களுக்குப் பல மூர்த்தி தத்துவங்களுடன் திருவிளையாடல் புரிந்த விவரம் பாகவதத்தில் இருக்கிறது. கீதையிலோ கண்ணன் பார்த்த சாரதியின் கோலத்தில் பரமாசார்யனாக முற்றும் புதிய ஒரு மூர்த்தியாய் நிற்கிறான். ஆனால் அந்தப் புதுமைமாறுபாடானதன்று. பாகவ தத்தின் வாழ்க்கை கீதத்தில் உச்ச நிலையை அடைகிறது. கீதையின் உயர்ந்த நிலையிலிருந்துதான் நாம் பாகவதத்தையே படித்துப் பொருள் படுத்திக்கொள்ள வேண்டும். பாகவதத்தின் தத்துவம் கீதையில் தான் விளக்கமாகிறது என்றுகூடச் சொல்லலாம்.

கீதையில் காணப்படும் பொருள்களைப் பல பெரியார்கள் பலநோக்குகளிலிருந்து ஆராய்ந்து உலகத்திற்குத் தங்கள் முடிவுகளை அறிவித்திருக்கிறார்கள். பாஷ்யக்காரர்களுக்குப் பிறகு கூட எவ்வளவோ வியாக்கியானங்கள் ஏற்பட்டிருக்கின்றன. நம் காலத்திலேயே திலகரும், அரவிந்தரும் ஆசார்ய விநோபாவும் கீதையின் உபதேசங்களைத் தங்களுக்குத் தென்பட்டவாறு விளக்கியிருக்கிறார்ள். ஞானிகள் ஒரு வகையில் கீதையை ஆதாரமாக் கொள்ளுகிறார்கள். பக்தர்கள் மற்றொரு விதமாகக் கொள்ளுகிறார்கள்.

பக்தியோகம் சம்பந்தப்பட்ட மட்டில் கீதையில் தென்படும் மூலதாரமான கருத்துக்கள் இரண்டே பற்றற்றுச் செயல் புரிவது (நிஷ்காம் கர்மம்), வேறு நினைப்பின்றி ஈசுவரனையே எல்லாமாகக் கொள்ளுவது (அநந்ய சிந்தை) என்ற இரு கொள்கைகளும் பக்தி மார்க்கத்தில் தெளிவும் ஒளியும் அளிக்கும் கண்கள், இவ்விரண்டும் மனிதன் தான் என்ற நினைப்பயும் அகங்காரத்தையும் களைய ஏற்பட்ட சாதனங்கள். பலனை எதிர்பாராமல் பற்றற்றுச் செயல் புரிவது என்பது, பஜனையில் இவ்வுலக நினைவுகள் போய்ப் பரம புருஷனின் நினைவு ஏகாக்கிரமாக ஏற்படுவதற்குக் காரணமாக இருக்கிறது. எப்பொழுதும் ஹரி நாமத்தையே சொல்லிக்கொண்டு அதே நினைவாக இருந்தால் பரவசம் தானாகவே உண்டாகும்.

நிஷ்காம கர்மம் என்பது என்ன? அநந்ய சிந்தை என்பது என்ன? கர்மம் (செயல்புரிவது) அவசியமா? சிந்தை அவசியமா? அவை ஏன் நிஷ்காமாகவும் அநந்யமாகவும் இருக்க வேண்டும் என்ற பிரச்னைகளை இன்னும் கொஞ்சம் விரித்து ஆராய்வது பயன் தருவதாகும்.

நிஷ்காம கர்மத்தின் தன்மையக் கிருஷ்ணனே கீதையில் சுருக்கமாக விளக்கி இருக்கிறார்.

**யத்கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத்**
**யத்தபஸ்யஸி கௌந்ததேய தத்குருஷ்வ மதர்ப்பணம்**
**சுபாசுப பலைரேவம் மோ ஷ்யஸே கர்ம**
**பந்ததை: 9-27-28**

**(எது செய்தாலும், எது உண்டாலும், எது குடித்தாலும், எது கொடுத்தாலும், எது கேட்டாலும்-அதை எனக்கு அர்ப்பணம் செய்துவிடு பார்த்தா் அதனால், மேலேற்படும் நல்லது கெட்ட தென்ற பலன்களிலிருந்து நீ விடுபடுவாய் )**

செயல்கள் கண்டிப்பாக ஏதாவது ஒரு விதத்தில் நல்லதாகவோ கெட்டதாகவோ பலனை அளித்துத்தானே ஆக வேண்டும்? நல்ல பலன் ஏற்பட்டால் மகிழ்ச்சிகொண்டு மனிதன் பலனில் மனம் ஊன்றிச் செயல் சக்தியையே மறக்கிறான்; அல்லது கெட்ட பலன் ஏற்பட்டால் செயல் சக்தியையே மறக்கிறான்; அல்லது கெட்ட பலன் ஏற்பட்டால் துக்கமடைந்து செயலற்றே போகிறான்: இரண்டு விதங்களிலும் செயல் சக்தி குன்றிவிடுகிறது. எனவே செயல் செய்வதொன்றிலேயே மனம் வைத்துவிட்டால் அதன் தொடர்பு அறுபடாது.

அறுபட்டால் என்ன? செயல் எதற்காக?

**காயேந மனஸா புத்யா கேவலைரீந் த்ரியைபி**

**யோகிந: கர்மகுர்வந்திஸங்கம் த்யகத்வாத்ம சுத்தயே**

**யுக்த: கர்மபலம் த்யக்த்வா சாந்திமாப்நோதி நைஷ்டிகீம்**

**அயுக்த: கர்மகாஉரேண பலே ஸக்தோ நிபத்யதே(5-11-12)**

**(மனோ வாக்குக் காயங்களாலும் வெறும் இந்தியரியங்களின் மூலமாகவும் பற்றைவிட்டு யோகிகள் ஆத்மா தூய்மை அடைவதற்காகச் செயல் புரிகிறார்கள் அப்படிக் கர்ம பலன் அல்லது வினையின் பயனை மறந்து ஈடுபட்டவன் நிரந்தரமான சாந்தியைப் பெறுகிறான் அப்படியின்றி இச்சைகளால் தூண்டப்படும் பலனில் ஈடுபடுகிறவன் அதனாலேயே கட்டுண்டு விடுகிறான்)**

செயல் செய்வது ஆத்மாவைத் தூய்மைப் படுத்துவதற்காக. பலனில் ஈடுபடாவிட்டால் அது நல்லதானாலும் கெட்டதானாலும் பாதிக்கிறதில்லை. அலைபடாத சாந்திக்குக் காரணமான செயல் தொடர்பு அறுபட்டால் சாந்தி குலைவுறும்; ஆத்மா தூய்மை பெறுவது தடைப்படும்.

நிஷ்காமமாக இருப்பது என்பது என்ற நிலையைக் கீதையில் வெகு தெளிவாக அறிகிறோம்

**நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மந்யதே தத்வித்(5-8)**

**இந்த்ரியா ணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயந்(9)**

**லிப்யதே நஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா (10)**

**(உண்மையறிந்தவன் நான் ஒன்றும் செய்யவில்லை என்று கருத வேண்டும்இந்திரியங்களுக்காகத்தான் இந்திரியங்கள் இருக்கின்றன என்று தெளிவு கொள்ளவேண்டும் அப்பொழுது தாமரை இலை தண்ணீரால் நனைபடாததுபோல் அவன் தீமையால் தொடப்படுவது இல்லை)**

இவ்விதமான பற்றற்ற கிரியைகள் அல்லது செயல்களின் தொடர்புதான் அநந்ய சிந்தைக்கு ஆதாரம் கிரியைகள் சுக துக்கப் பற்றின்றி நடைபெற்றால்தான் சாந்தி ஏற்பட்டு அநந்ய சிந்தைக்கே இடம் ஏற்படும் மேலும், அநந்ய சிந்தஎ என்பது என்ன?

**யோ மாம் பச்யதி ஸவர்த்ர ஸர்வம் சமயிபச்யதி**

**தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸசமே ந ப்ரணச்யதி(6-30)**

**தஸ்மாத் ஸர்வேஷுகாலேஷுமாமநுஸ்மர யுத் ச**

**மய்யர்ப்பித மநோ புத்திர் மாமேவைஷ்ஸ் ஸம்சய**

**அநந்யாயாஸ் சிந்தயந்தோ மரம் யே ஜநா பர்யுபாஸதே**

**தேஷாம் நித்யாபியூக்தானாம் யோக ஷேமம் வஹாம்யஹம் (9-22)**

**(எங்கும் என்னைக் காண்பவனுக்கும் எல்லாவற்றையும் நான் என்று காண்பவனுக்கும் நான் ஒரு காலும் அழிவு கொள்வதில்லை; அவனும் என்னிடத்தில் அழிவு கொள்வதில்லை**

**ஆகையால் எக்காலத்திலும் என்னை நினைத்துப் போராடு என்னிடம் ஈடுபட்டவன் என்னை நிச்சயம் அடைகிறான்.**

**வேறு சிந்தனைகளின்றி என்னையே உபாசிப்பவர்களுடைய யோக ஷேமங்களக்கு நான் பொறுப்பாளியாகிறேன்)**

"எல்லாம் அவன் செயல்" என்ற வாக்கியத்தின் முழுப் பொருளை இவ்விதம் உணர்ந்து மனிதன், தான் கடவுளின் கருவி என்ற மனப்பான்மையுடன் செயல் புரிவதே அநந்ய பாவமாகும்,

உபாசனையே உயர்ந்த செயல் முறையாகும்.

செயலே எதற்காக? செயலின்றி ஏன் இருக்கக் கூடாது?

செயல் செய்வததால்தானே- இந்திரியங்களுக்கு இடம் கொடுப்பதால் தானே-காமக்ரோதங்கள் முதலியன ஏற்பட்டு மமதை தோன்றிச் சுகதுக்க நினைப்பே ஏற்படுகிறது? செயலே வேண்டாமே? என்ற கேள்விகளுக்கும் கீதையில் பதில் இருக்கிறது.

**லோக அஸ்மிந் த்விவிதா நிஷ்டா புரா பரோக்தா மாயநக**

**ஞாநயோகேந ஸாங்கக்யா நாம கர்மயோ கேத யோகிநாம்(3-3)**

**ந கர்மணா மனாரம் பரந்தைநஷ்கர்ம்யம் புருஷோ அச்நுதே**

**ந ச ஸந்ந்ய ஸநாதேவ ஸித்திம் ஸமதி கச்சதி(3-4)**

**ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்ம க்ருத்**

**கார்யதேஷ்யவச: கர்ம ஸர்வ ப்ரக்ருதிஜையர் குணை (3-5)**

**(ஞான யோகம், கர்ம யோகம் என்ற இரண்டு வழிகளில் உலகத்தில் நிஷ்டர்கள் செல்லுகிறார்கள் என்று சொன்னேன்**

**கர்மாக்களைச் செய்யாததால் மட்டும் மனிதனுக்குச் செயலற்ற தன்மை ஏற்படுவதில்லை எல்லாவற்றையும் துறப்பதாலும் சித்தி ஏற்படுவதில்லை யாரும் ஒரு கணங்கூடச் செயல்புரியாமல் இருக்க முடியாது. இயற்கையில் உண்டான குணங்களைக் கொண்டு தாமாகவே எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன.)**

மனிதர்களுக்குச் செயல்புரியவேண்டும் என்ற குணம் தவிர்க்க முடியாமல் இருப்பதாகும். ஆகையால் மனித இயற்கையின் போக்கை அநுசரித்துக் கர்ம மார்க்கம் வகுக்கப்பட்டிருக்கிறது. ஞான மார்க்கம் ஒரு சிலரால்தான் பின்பற்றக்கூடிய வழியாக இருக்கிறது. இரண்டு பாதைகளும் ஒரே நோக்கம் கொண்டவைதாம்.

**ஸந்யாஸ கர்ம யோகஸ்ச நிச்ரேய ஸசராவுபௌ**

**தஸோஸ்து கர்மஸந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே (5-2)**

இந்திரியங்களை நிக்கிரகம் செய்து சித்தி பெறுவது ஞான மார்க்கம்; இந்திரியங்களைப் பயன்படுத்தி ஈசுவர சிந்தையில் ஆழ்த்தித் தூய்மையுறச் செய்து அவற்றின் மூலம் செயல்புரிந்து சித்திபெறுவது கர்ம மார்க்கம் ஞான மார்க்கத்தைக் காட்டிலும் கர்ம மார்க்கம் எளிதானது. அதனுடைய பரிணாமமே பக்தியோகம். பக்தி மார்க்கந்தான் கர்ம மார்க்கம் என்று இப்பொழுது சொல்லலாம்; கர்ம மார்க்ம் என்று ஸம்ஹிதை ப்ராஹ்மணங்களில் வகுக்கப்பட்ட யாக யஜ்ஞக் கிரியைகள் அடங்கியதைக் கூடக் கர்ம மார்க்கம் என்று இப்பொழுது கொள்ளவேண்டியதில்லை. ஹிந்து யுக தர்மத்திற்கு ஏற்றபடி பக்தி யோகந்தான் கர்ம மார்க்கம் என்று சித்தாந்தம் ஆகிவிட்டது. அதைத்தான் பாகவதர்கள் நாம சித்தாந்தம் என்று வழங்குகிறார்கள். இது கீதையிலே வற்புறுத்தப்பட்டிருக்கிறது என்பது,

ஸ்ர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமோகம் சரணம் வ்ரஜ (18-66) என்று கிருஷ்ணன் சொன்னதிலிருந்து தெரிகிறது.

பற்றற்ற செயல் முறையும் வேறு நினைப்பற்றுக் கடவுள் நினைப்பும் பக்திக்கு மூலாதாரமான தேவைகளாக இருப்பதால்தான் அவற்றைக் குறித்து இவ்வளவு விரிவாகக் கீதையின் ஆதாரத்தைக்கொண்டே எழுத வேண்டியிருந்தது. ஆதாரம் காட்டுவதிலும் கீதையின் பொருளைச் சொல்லுவதிலும் இங்கே நான் சம்பிரதாயமான வியாக்கியான முறைகளைப் பின்பற்றவில்லை. ஆதாரத்தைப் பிசகாகக் காட்டியோ அல்லது கீதையின் பொருளைத் திரித்தோ நான் ஒன்றுமே கூறவில்லை.

பக்தி இயக்கத்திற்குப் பாகவதத்துடன் கீதையும் சேர்ந்துதான் மூலமாக இருக்கிறது என்பதைக் காட்டுவதே என் நோக்கம்.

வாழ்க்கையென்னும் த்வந்துவத்தின் பாசத்திலிருந்து விடுபட்டு அதில் தாமரை இலை நீர் போல இருந்து சாந்தி பெறவதற்குப் பெரியோர்கள் இரண்டு பாதைகள் காட்டியிருக்கிறார்கள்; ஒன்று ஞான மார்க்கம், மற்றொன்று கர்ம மார்க்கம், உபநிஷதங்களில் விவரிக்கப்பட்ட ஞான மார்க்கம் ஒரு சிலருக்குத்தான் சாத்தியமானது; வேதங்களில் விதிக்கப்பட்டிருக்கும் கர்ம மார்க்கம் எல்லோரும் கடைப்பிடிக்க வேண்டிய எளிய முறையாகும் இந்த யுகத்திற்குக் கர்ம மார்க்கமே பக்தி மார்க்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வேதாந்த யோகத்தை நிலை நிறுத்திய ஆசார்யர்களே பக்தி யோகத்தையும் ஒரு வழியாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

ஆதி சங்கராசாரியர் லிதையின் உபாசனையை உபதேசித்தார். அதன் பலத்தால் சக்தி பூஜை வாம மார்க்கம் என்று வழங்கும் சிறையில் முக்கியமாக வங்காளத்தில்-வெகு பிலபலமாயிற்று; பிறகு அங்கே தான் ஜயதேவர், வித்யாபதி, சண்டீதாசர் முதலிய கவிகள் பாடிய வைஷ்ணவ பக்தி இயக்கமும் வலுத்தது.

இப்பொழுது பக்தி மார்க்கத்தின் பிறப்பு வளர்ப்பைச் சுருக்கமாகக் கவனித்தாகிவிட்டது. மேலே ஸ்ரீ கிருஷ்ண சைதன்யருடைய சரித்திரத்தை ஆரம்பிக்குமுன் பக்தி இயக்கத்தின் சரித்திரத்தைக் கொஞ்சம் சுருக்கமாகப் பார்க்க வேண்டும். முக்கியமாக வைஷ்ணவ பக்திக் கிளர்ச்சியையேதான் ஆராய வேண்டும்

# 4.ராதா-கிருஷ்ண வழிபாடு

ஏற்கெனவே சொன்னபடி கிருஷ்ண பக்தி இயக்கம், முக்கியமாக விசிஷ்டா த்வைதப் பற்றுக்கொண்டது; ஆனால் மத்வ மதமும் கிருஷ்ண வழிபாட்டில ஈடுபட்டதாகும், மத்வ மதத்தில் ராதை இடம் கூறிவில்லை. பரமாத்மாவான கிருஷ்ணனும் அந்தராத்மாவுமே இரண்டு பிரத்தியேகமான தத்துவங்கள் விஷ்ணு ஸ்வாமிகள் என்று ஒரு கொள்கையினர் ராதையையும், பரமாத்வாவின் பாகமாகப் போற்றி வழிபட்டார்கள். ஆனால் அவர்கள் மதம் ஆதரவற்றுக் காலக்கிரமத்தில் மறைந்து போய்விட்டது. த்வைதாத்வைதம் என்றும், பேதாபேதம் என்றும் பெயர் கொண்டது. மற்றொரு கொள்கை-அதாவது, அத்வைதமும் த்வைதமும் கலந்த ஓர் ஒட்டு. நிம்பர்க்கர் என்பவரால் அது ஸ்தாபிக்கப்பட்டது. அதில் ராதாகிருஷ்ண ஆராதனைதான் முக்கியமானது. **வல்லபாசார்யர்கள்** என்று மேலும் ஒரு கோஷ்டியினர் அத்வைத பரமாக ராதாகிருஷ்ண ஆராதனையில் பற்றுக்கொண்டவர்கள்.

மொத்தத்தில் வங்காளத்தில், முக்கியமாகப் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் வைஷ்ணவ பக்தி இயக்கம் பல முறைகளில் விரிவாகப் பரவி இருந்தது என்பதில் சந்தேகமில்லை. வித்யாபதி, சண்டிதாசர் இவர்கள் பாடல்களிலிருந்தும் பிற்காலத்தில் ஜய தேவருடைய கீதகோவிந்தத்திலிருந்தும் இது தெளிவாகிறது.

ஆனால் அந்த இயக்கத்திற்கு ஒரு வகையில் மூலமாக இருந்தவை தாந்த்ரிக வழிபாட்டின் வாமாசாரம் என்ற பெண்ணை வைத்துப்பூஜை செய்யும் முறையும், அழகிய பெண்ணின் சேர்க்கையால்தான் முக்திபெற முடியும் என்ற விபரீதம் கொண்ட ஸஹஜீயம் என்ற பௌத்த மறையுமோகும் என்று ஒருவாறு சொல்லலாம் மேலே சொன்ன இரண்டு முறைகளிலும் கீழ்த்தரமான ஸஹஜீய பூஜையின் பயனாகச் சிற்றின்ப ஊழல்களும் சிற்றின்பம் பெறுவது முக்திக்கு வழியென்று கொண்ட பௌத்த தர்மத்தின் வீழ்ச்சிக் கால மாறுபாடுகளும் வைஷ்ணவ இயக்கத்தில் கிடையவே கிடையாது. வைஷ்ணவர்கள் பரமாத்மாவின் பிருந்தாவன லீலைகளைத் தத்துவார்த்தத்துடன் கண்டு, அந்தப் பொருளைப் பாராட்டிப் பாடி மகிழ்ந்தார்களே தவிர, அவர்களுடைய பக்தியில் பகவானுடைய நினைப்பன்றி வேறொன்றும் இல்லை. அதில் ஒழுக்கக் குறைவே இல்லை.

வைஷ்ணவர்களின் சித்தாந்தப்படி வாழ்க்கை மாயை அல்ல. அது கடவுள் வரிபாட்டிற்கான சாதனை. இயற்கைச் சக்திகளைப் புறக்கணிக்காமல் அவற்றைக் கொண்டே பரமாத்மாவின் அநுபவத்தைப் பெற வேண்டும் என்பதுதான் அவர்கள் கொள்கை.

தென்இந்தியாவில் வைஷ்ணவ சித்தாந்தத்திற்கு விசிஷ்டாத்வைத மதத்தின் மூலம் பேராதரவு ஏற்பட்டது. ஓரளவில் இந்தியாவின் மற்ற எந்தப் பாகத்திலும் ஏற்படாத பலம் அதற்கு இங்கேதான் ஏற்பட்டது ராமாநுஜருடைய சிஷ்யரான ராமானந்தரின் மூலமாகத்தான் வடக்கே கூட வைஷ்ணவம் பரவிற்று நாலாயிர திவ்யப்பிரபந்த கர்த்தர்களின் வாக்கும் அனுபவங்களும் வைஷ்ணவ பக்தி இலக்கியத்தில் தலைசிறந்த ஸ்தானம் வகிக்கின்றன.

சர்க்கரையை நான் ருசி பார்க்கவேண்டும். நானே சர்க்கரையாகிவிட்டால் என்ன பயன்? என்று வடநாட்டு வைஷ்ணவ கவி ஒருவன் வெகு அழகாக வைஷ்ணவ மனப்பான்மையை விளக்கினான் ஜீவத்மா தனியாக இருந்து பரமத்ம ஸ்வரூபத்தை ருசி பார்த்து அநுபவிப்பது என்பதில்தான் மனித வேட்கைக்கே ஒரு பொருள் இருக்கிறது; ஜீவாத்மா பரமாத்வாவிலேயே ஐக்கியமாகி விடுவதென்றால் மனிதனுடைய முயற்சிக்கே அர்த்தமில்லை. வாழ்க்கைக்கே அர்த்தம் இல்லை. மனித இயற்கைக்கே இடமில்லை என்பது தான் இந்தச் சித்தாந்தம். ஸாயுஜ்யம் என்ற முக்தி நிலையை வைஷ்ணவர்கள் ஆதரிக்கவில்லை. ஸாலோகம், ஸாமீப்யம் எல்லாம் முயற்சி செய்து அடையவேண்டிய நிலைகள். ஜீவாத்மா என்றென்றும் தனி என்றாலும் பக்தியின் மூலம் பகவத் ஸ்வரூபத்தை அண்டி நிற்கலாம். அந்த அநுபவமே முக்தியாகும்.

அந்த அநுபவத்தின் வெளியீடு தென்நாட்டில் தமிழில் ஏற்பட்டிருப்பது போல வேறு எங்கும் ஏற்படவில்லை. சைவ பக்தரின் உள்ளப் பெருக்கு ஒரு புறம் இருக்க ஆழ்வார்களுடைய பாடல்கள் பக்தி விஸ்தரத்தில் தனிச்சிறப்பு வாய்ந்து நிற்கின்றன. திவ்யப்பிரபந்த கர்த்தர்களின் வாக்கில் இருக்கும் தெளிவும் அவர்களுடைய அநுபவத்தில் இருக்கும் தூய்மையும் ஒரு வகையில் நிகரற்றே இருக்கின்றன

ஆழ்வார்கள் மொத்தத்தில் பன்னிருவர், அவர்களின் பாசுரங்கள் முழுவதும் நாலாயிரத்தில் அடங்கி இருக்கின்றன. அவர்கள் வாழ்ந்த காலம் கி.பி.550 முதல் 950 வரை என்று சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அவர்களுக்குப் பிறகுதான் ராமாநுஜர் தோன்றினார். அவருடைய சிஷ்யரான ராமானந்தரின் மூலந்தான் வைஷ்ணவ சித்தாந்தம் வடக்கே பரவிற்று. பன்னிரண்டு ஆழ்வார்களுடைய பெயர்களும் அவர்கள் இயற்றிய

பாசுரங்களின் தொகையும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | |
|---|---|
| **1. பொய்கை ஆழ்வார்** | **100** |
| **2. பூதத்தாழ்வார்** | **100** |
| **3. பேயாழ்வார்** | **100** |
| **4. திருமழிசை யாழ்வார்** | **216** |
| **5. திருப்பாணாழ்வார்** | **10** |
| **6. தொண்டர் அடிப்பொடி ஆழ்வார்** | **55** |
| **7.திருமங்கை ஆழ்வார்** | **1361** |
| **8. குலசேகர ஆழ்வார்** | **105** |
| **9. பெரியாழ்வார்** | **473** |
| **10. ஆண்டாள்** | **173** |
| **11. நம்மாழ்வார்** | **1296** |
| **12. மதுரகவி ஆழ்வார்** | **11** |

இந்தப் பாசுரங்களைப் பத்தாம் நூற்றாண்டின் நடுவில் நாதமுனி என்பவர் திரட்டித்தொகுத்து நம்மாழ்வாரின் பார்வையில் ஒரு நூலாகச் செய்தார்.

ஆழ்வார்களைப் பற்றி விரிவாகவோ, அவர்களின் பாசுரங்களைப் பற்றி விஸ்தாரமாகவோ எழுத எனக்குத் தேர்ச்சியும் இல்லை. இங்கே இடமும் இல்லை. வைஷ்ணவ தர்மத்திற்கு அவர்கள்தாம் ஆதி புருஷர்கள் என்பதையும் அவர்களின் மூலமே வைஷ்ணவ பக்தி மார்க்கம் விரிவடைந்தது என்பதையும் மட்டுமே நாம் இங்கே அறிய வேண்டும்.

## 5. சைதன்ய மதம்

ஒவ்வொரு மகானும் உபதேசம் செய்யும் மார்க்கத்திற்கு உற்சாகிகளான கோஷ்டிகள் ஏற்படுகின்றன.அவர்கள் ஊக்கம் நாளடைவில் நிதானமற்றுப் போய் உண்மையிலேயே குருவுக்கு மிஞ்சின சிஷ்யர்கள் ஆகிவிடுகிறார்கள். அந்த மாதிரிதான்ஒவ்வொரு மதாசார்யரின் கொள்கையும் பிற்காலத்தில் மதப்பித்துக்கொண்ட பிரசாரர்களின் கையில் உரு மாறிப் போய்விடுகிறது. புத்தர் புகட்டிய அன்பு மதம் பிற்காலத்தில் எப்படி எப்படியோ மாறிக் கடைசியில் வெறும் விக்கிரக ஆதாரதனையும் மதச்சடங்குகளும் மண்டின மூட சம்பிரதாயமாக மாறிற்று. கிறித்துவின் தூய விதிகள் தலைகீழாக மாறிவிட்டன; அவை போலவே, சைதன்யர் வாழ்க்கையில் நடந்தேறிய அநுபவங்களைப் பிற்காலத்தில் வந்தவர்கள் ஒரு தனி மதம் போல ஸ்தாபனம் செய்து, கட்டுத்திட்டங்கள், நிலையங்கள், வியாக்கியானங்கள் எல்லாம் வகுத்து விட்டார்கள்.

ஆனால் சைதன்யர் தம் வாழ்க்கை மூலம் வெளிப்படுத்திய உண்மைகள் அவ்வளவு சிக்கலானவைஅல்ல; அநுபவம் தான் முக்கியம். சடங்குகள் ஒன்றுமே முக்கியமல்ல; ஹரி நாம ஸ்மரணை பஜமனை-தான் அந்த அநுபவத்திற்கு ஆதாரம் அதுதான் ஆனந்தம்.

அந்தப் பஜனையை யாரும் செய்யலாம்; முக்திக்கு அது ஒன்று தான் தலைசிறந்த மார்க்கம். இறைவனிடத்தில் ஈடுபடுவது என்பது ஒன்றுதான் மனித லட்சியம். மனிதன் இங்கே அடையக்கூடிய ஆனந்தம். சைதன்யருக்குப் பிறகு வந்த பிரசாகர்கள் அவரது வாழ்க்கைக்கு ஓர் அவதாரப் பொருள் கொடுத்து அவருடைய செயல்களுக்கும் வாக்கிற்கும் தெய்வீக மகிமை ஏற்றி அவர் அநுபவத்தை ஒரு கொள்கையாக்கி அதை அக்கு அக்காகப் பிரித்து, தனித்தனிப் பொருள்கள் கூறி, மத நூல்களை வகுத்துவிட்டார்கள். சைதன்ய மதஸ்தர்கள் பாகுபாடு செய்த சில முக்கியமான கருத்துக்களை மட்டும் குறிக்கிறேன்.

**1. கிருஷ்ணன்தான் கடவுள்**

**2. சைதன்யர் கிருஷ்ணன் எடுத்த அவதாரம்**

**3. ஹரிநாம பஜனை பாபத்திற்கு இடம் கொடாது**

**4. முக்தி என்பது பரவச அவஸ்தை**

**5. பக்தி மார்க்கந்தான் அதற்கு வழி**

**6. வைகுண்டம், கோலோகம், பிருந்தாவனம் என்று மூலவுலங்கள் உண்டு**

**7. ஜீவாத்மா, குரு, சாஸ்திரங்களின் மூலம் பரமாத்வாவிடம் ருசி ஏற்படுகிறது**

**8.வாழ்க்கை உண்மை; மாயை அல்ல.**

பக்தியில் சாந்தம், தாஸ்யம், ஸக்யம், வாத்ஸல்யம், மாதுர்யம் என அநுபவங்கள் படிப்படியாக ஏறும். சாந்தம் என்பது வெறும் நினைப்பு; தாஸ்யம் என்பது பணி செய்வது; ஸக்யம் என்பது தோழமை பாராட்டுவது: வாத்ஸல்யம் என்பது அன்பைக் குழந்தை போலக் காட்டுவது; மாதுர்யம் என்பது காதலி போல இன்பம் பெறுவது. ராதை கிருஷ்ணனிடம் கொண்ட நினைப்புத்தான் மாதுர்ய நிலை.

மற்றொரு விசேஷம்: ராதையைக் கிருஷ்ணனுடைய பாரியைகக் கருதிய கோஷ்டியினர் ஒரு சாரார் அவர்கள் ஸ்வகயக் கொள்கையுடையவர்கள்; ராதை கிருஷ்ணனுடைய காதலிதான் என்று கருதியவர்களுடைய கொள்கைக்கப் பரகீயம் என்று பெயர். பரகீயக் கொள்கை தான்அதிகமாகப் பரவி வலுத்தது.

ஸ்வகீயக் கொள்கையில் கல்யாணம் போன்ற விதிகளுக்கும் சடங்குகளுக்கும் அதிகமாக ஆதரவு உண்டு. பரகீயத்தில் உணர்ச்சிக்கும் உள்ளத்திற்குமே இடம் அதிகம் பாதி வ்ரத்யத்தையே பெண்களுக்குப் பரம தர்மமாகக் கூறும் சமூகத்தில் இப்படி வியபிசார முறையைக் கையாண்ட ராதையின் காதலைப் போற்றுவது ஒரு விபரீதம் போலத் தோன்றும். கிருஷ்ணன் என்ற லட்சிய விக்கிரகத்தினிடம் கொள்ளும் கள்ளக் காதலைப் பாராட்டும் மார்க்கம் ஹிந்து மத வளர்ச்சிக்குப் பொருத்தமானதன்று என்றும் அறியாதவர்கள் கூறுவார்கள்

ராதாகிருஷ்ண பாவத்தில் பக்தி பரவசமாக ஈடுபடுவதில் பல குறைகள் இருக்கின்றன என்று ஆங்கிலத்தில் சைதன்ய இயக்கத்தைப் பற்றி எழுதியிருக்கும் ஆசிரியர் ஒருவர் கூறுகிறார். அவர் குறிப்பிட்டிருக்கும் குறைகளில் சில பின் வருவன:

**1. உள்ளத்திற்கும் உணர்ச்சிக்கும் பிராபல்யம் கொடுத்து விடுவதல் அறிவு மங்குகிறது**

**2. பக்தி பிரதானமான தத்பாவ உணர்ச்சி, அது புற உலகிற்குப் பயன்படாதது**

**3. பக்தி பரவசம் பல அதியான செயல்களுக்குக் காரணமாகிறது**

**4. விக்கிரக ஆராதனை**

**5. கர்ம உணர்ச்சிக்கு விஸ்தரிப்பு அதிகமாக இருக்கிறது**

**6. விபபிசாரத்தைப் போற்றுகிறது**

இந்த மாதிரி மேற்சொன்ன ஆசிரியர் குறை கூறிக் கிறிஸ்துவ பக்தி மார்க்கம் எவ்வாறு இதைவிட மேலானது என்பதை அறிவுறுத்த முயலுகிறார்.

கிருஸ்தவ பக்தி மார்க்கமும் ஹிந்து பக்தி மார்க்கத்தைப் போன்றதேயாகும் இடைக்காலத்தில் அதில்கொஞ்சம் அதிகமாகத் தென்பட்ட சதையுணர்ச்சி பிற்காலத்தில் மறைந்து போய்த் தூய கல்யாண உணர்ச்சிதான் இருக்கிறது என்கிறார். பிற்காலத்தில் சதையுணர்ச்சி (Erotism) என்று ஆசிரியர் புறக்கணிக்கும் பாவம் இல்லாமற் போனதற்குக் காரணம் உண்மையான பக்தர்கள் கிருஸ்துவ மதத்தில் தோன்றாமல் போனதுதான் குறைகள் என்று கூறப்படும் மேலே கண்ட அம்சங்கள் எல்லாம் சிறப்புகள் என்பதை ஒருவாறு ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசியம். ஏனென்றால், அவைதாம், பக்திக்கு மூலாதாரமான அம்சங்கள். அவற்றைக் கண்டித்தால் பக்தி மார்க்கத்தையும் மாபெரும் பக்தர்களின் வாழ்க்கையையும் அநுபவங்ளையும் கண்டித்தாகவே பொருளாகும்

## 6.பக்தியின் லட்சணங்கள்

**1. பகுத்தறிவு மங்கல்**

பகுத்தறிவு மேலா, உணர்ச்சி மேலா என்ற பிரச்சனையைப் பற்றி ஆதிமுதல் மனிதன் ஆராய்ச்சி செய்து வந்திருக்கிறான். இந்திரியங்களின் துணையுடன் வேலை செய்யும் மனந்தான் மேலானது. உணர்ச்சி வெறும் ஏமாற்றம் என்பது ஒரு கட்சி; உணர்ச்சிதான் இந்திரியங்களையும் மனத்தையுமே சுட்டியாளும் பெருஞ்சக்தி என்பது மற்றொரு கட்சி. கவிகளும் யோகிகளும் உள்ளம் பெருக்கும் உணர்ச்சிக்கே கட்டியிருக்கிறார்கள்; உணர்ச்சிதான் உண்மை ;

**ஸதாம் ஹி ஸந்தேஹ பதேஜு வஸ்துஷ**
**ப்ரமாணம் அந்தஃகரண ப்ரவ்ருத்தய**
**(சாகுந்தலம் )**

என்று காளிதாசர் சாகுந்தலத்தில் சொல்லுகிறார். விஞ்ஞானிகளும், பௌதிக ஆராய்ச்சியாளர்களும் பகுத்தறிவே மனிதனுக்கு வாய்ந்த மேலான குணம் என்று சாதிக்கிறார்கள். ஆனால் இவ்விரண்டு சோதனைகளும் கலந்த ஒரு பக்குவமான நிலைதான் உண்மையாக மனிதன் பெற வேண்டியது. அதுதான் நித்யா நித்ய விவேசனம். நிலையுள்ளது, நிலையற்றது என்றவாறு வாழ்க்கையின் பல அம்சங்களையும் மனிதனுக்குப் பிரித்துக்காட்டி நிலையுள்ளதைப் பின்பற்றுமாறு தூண்டும் சக்தி வெறும் பகுத்தறிவோ, வெறும் உணர்ச்சியோ சிருஷ்டி சக்தி பெறாது மலரும் பக்தியில் பகுத்தறிவு மங்குகிறது என்பது சரியல்ல; பகுத்தறிவு உணர்ச்சியுடன் இரண்டறக் கலந்துவிடுகிறது: பகுத்தறிவின் அம்சம் இல்லாவிட்டால் எக்காலத்திலும் நீடித்து ஸ்தைர்யம் (நின்ற நிலை) ஏற்படாது. நின்ற நிலைதான் பக்திக்கு அஸ்திவாரம்.

**2. பக்தி தத்துவ உணர்ச்சி அது புற உலகிற்கு அப்பாற் பட்டது**

பக்தி கடைசி லட்சியம்; ஆத்மானுபவம் என்பது உண்மை; ஆனால் பக்தியின் தற்காலிக லட்சியம் என்ற அநுபவம்; ஓரளவு ளியாக்க முடியுமானால் தான் அது நிற்கும்; ஆனால் பக்தியின் லட்சணங்கள் புற உலகத்தால் அறியக்கூடியவை. அவை விபாவம். அநுபாவம், சாத்விகம், வ்யபிசாரிசும் என்று நான்கு வகைப்பட்டவை: அவற்றின் மூலம் பக்திக்குரிய பொருள்களான புறச்செயல்கள் யாவும் தென்படும். நாம சங்கீர்த்தனமும் பாடல்களும் அவற்றிலிருந்து விளைவன. இலக்கிய ரதியிலிருந்து பிறக்கும் பொருள்தான் பக்தி. வாசிகம் என்ற அந்தச் செயல்களில் ரதியின் பெருக்கு முழுவதும் தென்படாமல் இருக்கலாம்; ஆனால் உவமை முதலிய அலங்காரங்களின் மூலமாகவும் ராதா கிருஷ்ணன் லீலைகள் என்ற உட்பொருள் கொண்ட காதற் செயல்கள் மூலமாகவும் அதைப் பக்தன் வெளியிட்டுக் காட்ட முயலுகின்றான். புற உலகம் அதைக் கண்டு உட்கொள்ளும் சக்திக்கும் ஏற்றவாறு அதைத்தன் அநுபவமாக்கிக்கொள்ளுகிறது.

சாதாரணமாக பஜனை கோஷ்டியிலும் பக்திப் பாடல்களைப் படிப்பதிலுமே இதைக் காணலாம். பரவசமாகப் பஜனை செய்பவர்களைப் பார்த்தாலே மக்களுக்கும் ஓரளவில் அந்தப் பரவசம் ஏற்பட்டு விடுகிறது. அநுபவங்களான பாடல்களைப் படித்தாலே அனுபவம் போன்ற உள்ள மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஆகையால் துதிப்பாடல் அநுபவம் புற உலகத்திற்கு உபயோகமில்லை என்று சொல்லுவது போல் ஆகும்

**3. பக்தி பரவசம் பல அதிகமான செயல்களுக்குக் காரணமாகிறது**

பக்தி பரவசம் அதிகமான உணர்ச்சி வெளியீட்டிற்கும் செயல்களுக்கும் காரணமாக இருக்கிறது என்று சொல்வதில் தப்பில்லை. ஆனால் அது குறை என்று கூறுவது பிசகு. அதன் சிறப்பைக் குறை என்று கூறுவது விபரீதமான வாதந்தான்.

பரவசத்தின் லட்சணமே அதிசயிப்பது தானே? அதிசய உணர்ச்சி, அதிசயச் செய்கை, அதிசயச் சொல் இவற்றின் மூலந்தானே பரவசம் உருவம் பெறுகிறது. பால் பொங்குவது என்பது என்ன? பாதிப்பாத்திரத்தில் இருந்த திரவம் முழுப் பாத்திரத்தையும் அதிசயித்துப் போவது தானே? எந்தப் பெருக்கும் அதிசயந்தான். காவியமே

அதிசயம். அதிசய அலங்காரத்தால் புற உலகிற்குப் பக்தி புலனாகவும் செல்கிறது. அநுபவம் எப்பொழுதும் அதிசயிக்கத் தக்கதல்ல; அதன் மலர்ச்சிதான், வெளித்தோற்றம்தான், பரவல்தான் அதிசயித்துப்போகும்-எப்போதும் ஒளியிலிருந்து கிளம்பி அதை மீறிச் சென்று ஒளித்தன்மை கொள்ளும் கதிர்கள் போல.

**4. விக்கிரக ஆராதனை**

பக்தி மார்க்கத்தில் விக்கிர ஆராதனை பிரதானமாக இருப்பதைக் குறையாகச் சிலர் கூறினால் அதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. பக்தியின் தன்மையையும் நோக்கத்தையும் சரியாகத் தெரிந்து கொள்ளாததால் ஏற்படும் பிசகு இது. பக்திக்குச் சகுணோபாசனை முக்கியம்; குணகர்மங்கள்கொண்டமூர்த்தி ஆராதனையிலேதான் அந்த அநுபவம் உருவடைகிறது. அநுபவம் சொல் மூலம் வெளியாவது போல செயல் மூலம் தான் வெளியாகிறது; செயலுக்கு மூர்த்தி ஆதாரம். சப்தஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் என்று இந்திரிய வாசனைகள் இடம்பெறுவதற்கும், அவை வேறு வழியில் செல்லாமல் நிற்பதற்கும் தங்கள் சேஷ்டைகளின் மூலம் மனத்தையும் உள்ளத்தையும் ஒருங்கே சேர்த்து அநுபவத்தில் லயிக்கும்படி செய்யவும் மூர்த்தி உபசானை இன்றியமையாத கருவி. பக்தி அதைமீறிச் செல்ல முடியாது என்பதல்ல; சொல்லப்போனால் பக்குவடைந்த நிலையில் மூர்த்தி உபாசனையை மீறியே பக்தி சென்று விடும். அநுபவத்திற்குப் பக்தன் கொடுக்கும் வெளி உருவமே-விக்கிரகம் அவ்வளவுதான்.

**5. காம உணர்ச்சி விஸ்தரிப்பு அதிகமாக இருக்கிறது**

பக்தி மார்க்கத்தில் காம உணர்ச்சிக்குப் பெருமிதமான விஸ்தரிப்பு இருக்கிறது என்பது மற்றொரு குற்றச்சாட்டு. இது சரியா என்பதைக் கொஞ்சம் தெளிவாக ஆராய்ந்து பார்க்க வேண்டும்? ஏனென்றால், இந்திய பக்தி இயக்கத்தில் நாயக நாயகி பாவம்என்று காதலன் காதலி தத்துவம்தான் விஷேசமாக உணர்ச்சியை வெளியிடுவதற்குப் பக்தர்கள் கையாண்ட கருவியாக இருக்கிறது. உலகத்தில் எந்தப் பாகத்திலும் பரஸ்பரத் தொடர்பின்றியே இந்து மனப்பான்மை இருந்திருக்கிறது. இடைக்காலத்தில் கிருஸ்துவ பக்தர்கள் கூடத் தங்களைக் கடவுளின் காதல் மனைவிகளாகப் பாவித்துத்தான் தங்கள் பரவசத்தை வெளியிட்டிருக்கிறார்கள். இந்த அபிப்பிராயம் இந்தியாவில் அதிகமாகப் போய் பக்தி இலக்கியம் முழுவதும் சரீர சம்பந்தத்தை ஒட்டிய பச்சை பச்சையான வர்ணனைகளாகவும், ராதையின் விபசார மார்க்கத்தைப் புகழ்வதாகவும் இருக்கிறது என்று சிலர் கருதுகிறார்கள். பின்னால் வந்த சைதன்ய மதத்தைச் சேர்ந்த வைஷ்ணவ வைராகிகள் பகிரங்கமாக வைஷ்ணவிகள் என்ற சந்நியாசிகளுடன் சிற்றின்ப சம்பந்து வைத்தக்கொண்டு வாழலானார்கள் என்பது வாஸ்தவந்தான். ஆனால் அது பாவத்தின் பிசகல்ல. தத்துவத்தின் பிசகல்ல, அதைக் கடைப்பிடித்தவர்களின் குற்றமல்ல. எந்த மதத்திலும் எந்தச் சமூகத்திலும் முதல் ஆசார்யன் வகுத்த பாதை பின்னால் விபரீதமாக மாறியிருப்பதைச் சமய வரலாற்றில் காண்கிறோம்.

பரமாத்மா நாயகன்; ஜீவாத்மா நாயகி. நாயன் நாயகியிடமிருந்து பிரிந்திருக்கிறான். நாயகனுடைய பிரிவாற்றாமையைக் காட்டிலும் நாயகியினுடையது அதிகமாக இருக்கிறது. காளிதாசனுடைய மேக சந்தேத்தில் நாயகன் நாயகியிடமிருந்து விரிவுபட்டு அளகாபுரியிலிருந்து வெளியேறி, ராமகிரி ஆசிரமத்தில் வசித்து ஏங்குகிறான். இங்கே நாயகி நாயகனிடம் இருக்குமிடத்திலிருந்து பிரிவுப்பட்டு வாழ்க்கையில் சிறைப்பட்டுத் தவிக்கிறாள்-அசோக வனத்தில் சீதை தவித்தது போல. ஆகையால் நாயகி தான் நாயகனை அடைய முயலுகிறாள். அவளுடைய வேட்கைக்கு ஓர் எல்லை இல்லை. நாயகனுடைய சம்பந்தம் பெற வேண்டுமென்பது ஒன்றுதான் அவளது ஆசை. ஆகையால் எட்டு விதமான நாயகிகளின் போக்கில் இவளுடைய அபிசாரிகைப் போக்கு. * ராதை என்ற மனித உள்ளம் கண்ணன் என்ற பரமாத்ம ஸ்வரூபத்தை அபிஸாரிகா முறையில் கள்ளத்தனமாக வேஷம் போட்டுக்கொண்டு மறைவாகத் தேடிக்கொண்டு போகிறது. நேரம் இரவு, கன இருள். மேகமும் மின்னலும் இடியும் துணை புரிகின்றன. அவள் காதலனைச் சந்திக்கப் போகும் சங்கேத இடம் யமுனைக் கரை!

.....................................................................................................................................................................................................

* எட்டு விதமான நாயகிகளில் அபிசாரிகையின் குணம் பின் வருமாறு:

(யா ஸ்மரார் தா காந்தம் ஸ்வயம் அபிஸரதி தம் அபிஸாரயதி வா ஸாபிஸாலிகா)

…………………………………………………………………………………………………………………………………………………………………

…….

வ்ஜபுரி (பிருந்தாவனம்), கோபிகள் என்ற ஜீவாத்மாக்கள் உலாவும் இடம். அதன் ஒவ்வொரு மரநிழலிலும் சுனையருகிலும் பரமாத்மாவான கிருஷ்ணனுடைய சாயல் தோன்ற, குழலோ தொனிக்கின்றது. கோபிகள் அந்தத் தோற்றங்களையும் ஒளிகளையும் கண்டும் கேட்டும் வாழ்க்கைத் தொல்லையை மறந்திருந்து காதலன் நினைப்புக்கொண்டு அவனைத் தேடி அலைகிறார்ள். கோபிகள் சாதாரண மனிதர்கள் போன்றவர்கள். ராதை பக்தனைப் போன்றவள். அவள் போக்கே தனிப்போக்கு, அவளுக்கு வார்க்கை நினைப்பில்லை; வேறு எந்த நினைப்பும் இல்லை.

மனித உள்ளம் என்ற ராதை, தர்க்க புத்தியின் மனைவி, அவள் பரமாத்மாவைக் காதலிக்கிறாள். அவளுடையது கள்ளக்காதல், அவள் பரகீயை; * அதாவது, பிறன் மனைவி, அவள் பரமாத்மாவைக் காதலிப்பதால் விபசார தோஷம் பெறுகிறான். அவள் பிறன் மனைவியாக இருப்பதாலேதான் அவளது காதல் தனிப்பெருக்கும் வேகமும் இனிமையும்கொண்டிருக்கிறது.

பக்தனுடைய பரவசம் கள்ளக் காதல் போன்று தனிப்பெரும் இனிமை. அதற்காகத்தான், அந்த உணர்ச்சியின் தனித்தன்மையும் அந்நிய பாவத்தையும் தீவிரப் போக்கையும் விளக்க ராதையைப் பக்தர்கள் பரகீயையாகப் பாவித்துப் பாடுகிறார்கள். இந்த பாவம் ஆங்கிலத்தில் (Symbolism) என்று சொல்லும் சின்னத்தை–அடையாளத்தைக் குறிக்கும் அலங்காரம்.

இந்த ஆதாரத்தில் பக்தர்கள் உணர்ச்சியை விஸ்தரிக்கும்பொழுது ராதை கிருஷ்ணன்– இருவர்களுடைய பிரிவையும், சேர்க்கையையும் காவிய அழகுடன் சிற்றின்ப விளையாட்டாகச் சித்தரிக்கிறார்கள். இந்தச் சித்தரிப்பு காவியாலங்கார சாஸ்திரப்படி விப்ரலம்ப ச்ருங்காரம் (பிரிவு) என்றும், சம்போக ச்ருங்காரம் (சேர்க்கை) என்றும் இரண்டு வகையாக அமைந்திருக்கிறது. காவியாலங்காரத்தையொட்டி எழுதியதால் பக்தர்கள் எழுதிய வர்ணனைகள் அந்தச் சாஸ்திரத்திய குறித்த முறையில் அமைந்திருக்கிறன * அதைத் தவிர மேலே பக்தர்களைப் பெண்ணாகக் கொண்டு பெண்களின் அங்க வர்ணனைகளிலும் சேர்க்கை வர்ணனைகளிலும் வேண்டுமென்றே அவர்கள் திளைத்தார்கள் என்றுஅர்த்தமில்லை. அப்படிக் கூறுவது முற்றும் பிசகு. இந்தியாவில் மதத்திற்கும் இலக்கியத்திற்கும் இடையே இணைபிரியாத தொடர்பிருப்பதால் ஏற்பட்ட இந்து வர்ணனைகளைக் காமப்பித்துப் பிடித்தவர்கள் எழுதியது என்று சொல்வது தவறு. நம் கலைப் போக்கை அறியாதவர்கள் செய்யும் தப்புப் பிரசாரம்.

…………………………………………………………………………………………………………………………………………………………………

…….

* பரகீயையின் தன்மை காவியாலங்காரத்தில் பின்வருமாறு விளக்கப்பட்டிருக்கிறது;

பரகீயா பரஸ்த்ரீகந்யாச, பரகீயா (பிறபெண்) என்பவள் வேறொருவன் மனைவியும் கல்யாணமாகாத கன்னிகையும். நாயகிகளோ மூன்று விதமானவர்கள். ஸ்வகீயா (சொந்த மனைவி), பரகீயா, ஸாமான்யா (தாஸி)

*** ஸம்போக ச்ருங்காரம்**

ஏகாந்த ஸுகமய: ந்ருத்யாதிந்ய பிசாரி...

பரஸ்பராலிங்க சும்பந அவலோக நாத்

ய நந்தபேத: ஸம்யுக்தயோ: ஸம்போக:

**விப்ரஸம்ப ச்ருங்காரம்**

ஸந்தாப ஜாகரே கார்ச்சய ப்லப ஷாம நேத்ரவசோ

வக்ர தாதீந ஸம்சரணா நுகார லேக வேகா வாக ந

ஸ்வபாவ நி ஹ்ருஸ்வார்த்தா ப்ரச்ந ஸ்நேஹ நிவேத ந

ஸாத்விகாநுபவ சீத ப்ரயோக ஸேவ ந மரணோத்யம

ஸந்தேசதாராத்யநுபவோ நியுக்தயோ: விப்ரலம்ப

…………………………………………………………………………………………………………………………………………………………………

…….

## 7.விபசாரத்தைப் போற்றுகிறது.

பிறன் மனைவியான ராதையின் காதலை மேன்மைப்படுத்துவதால் பக்தி விபசாரத்தைப் போற்றி ஆதரிப்பதாக ஆகிறது என்பது மற்றொரு யுக்தி வாதம். அபிஸாரிகையின் விப்ரலம்ப அவஸ்தை நிலையின் கொடும் வேதனை ஒன்றுதான் பக்தனுடைய வேட்டைக்கு ஆதர்சமாகச் சொல்லக்கூடியதாக இருக்கிறது என்ற ஒரே காரணத்தைக் கொண்டுதான் பக்தர்கள் அதை உதாரணமாக எடுத்துக்காட்டுகிறார்கள்.

இரவனானாலும் சரி, மழையானாலும் சரி, இருளானாலும் சரி, இடியானாலும் சரி, மின்னலானாலும் சரி, புது வெள்ளம் பெருகிய நதிக்கரையானலும் சரி, அபிஸாரிகை கவனிக்கிறதில்லை. காதலன் மட்டும் அவளது காதலைப் புறக்கணிக்காதவனாகவும், உள்ளத்தை அவளுக்குப் பறிகொடுத்தவனாகவும் இருந்தால் எந்தத் திசையையும் பொருட்படுத்துவதில்லை

பக்தர்களுடைய விஸ்தரிப்பில் இரண்டு விதமான வர்ணனைகள் இருக்கின்றன என்பதை நன்றாக அறிய வேண்டியது மிகவும் அவசியம். ராதை கிருஷ்ணன் சம்பந்தமான பிரிவையும் சேர்க்கையையும் வர்ணிக்கும் முறை சிருங்கார முறையைச் சேர்ந்தது. அதாவது, ஸ்தீரி-புருஷ சேர்க்கையை வர்ணிப்பது, அவர்கள் தங்களைக் காதல் நிலையில் இருத்திக்கொண்டோ, ப்ரேமை வகைகளான தாஸ்யம், சக்யம், வாத்ஸல்யம், மாதுர்யம் என்ற பகுதிகளில் இருத்திக்கொண்டோ வர்ணனை செய்வது ரதி-அநுபாவம்-என்ற முறையைச் சேர்ந்தது. இந்த வித்தியாசம் மிகவும் முக்கியமானது. இதை அறிந்துகொள்ளாமல்தான் பலர் பல வகைகளில் பக்தியின் போக்கைப் பற்றித் தாறுமாறாக எழுதுகிறார்கள். இந்த வித்தியாசத்தை வாக்படர் மிகவும் தெளிவாக வற்புறுத்துகிறார்.:

ஸ்த்ரீ புருஷர்களுக்கிடையே ஏற்படும் ரதிக்குத்தான் ச்ருங்காரம் என்று பெயர், தேவ, குரு, முனி, புத்திரர்கள் முதலியவர்கள் சம்பந்தப்பட்ட ரதி அநுபாவம், சிருங்காரமல்ல

நாயக நாயகி பாவத்தைப் பற்றி தப்பெண்ணங்களும் வேண்டுமென்று திரித்துக் கூறலும் தப்புப் பிரசாரங்களும் அதிகமாக இருப்பதால் இதுபற்றி இவ்வளவு விரிவாக ஆதாரங்களுடன்சொல்லவேண்டி ஏற்பட்டது பண்டித சீதா நாதத்வ பூஷணரைப் போன்ற அறிவாளிகள் கூட, சிருங்கார வர்ணனை மிகவும் அதிகமாகவும் வீரசமாகவும் பக்திப் பாடல்களில் தென்படுகின்றன என்று சொன்னால் வேறு யார்தாம் என்ன தான் சொல்ல மாட்டார்கள்? மற்றொரு விசேஷத்தையும் கவனிக்க வேண்டும்; ராதா கிருஷ்ண லீலைகளைச் சிருங்கார முறையில் வர்ணிப்பவர்கள் எல்லோரும் அநேகமாகக் கவிகள், வேட்கையை மாதுர்யமாக அநுபவ முறையில் வெளியிடுகிறவர்கள் எல்லோரும் அநேகமாக ஜீவன் முக்தர்கள், சர்வசங்க பரித்தியாசம் செய்வதர்கள். யோகிகள் -பெண்ணாசை என்ற உணர்ச்சியற்றவர்கள். ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் இந்த வகுப்பைச் சேர்ந்தவர். ஜயதேவரும் வித்யாபதியும் சண்டிதாசரும் முதல் வகுப்பைச் சேர்ந்தவர்கள்; நம்ஆழ்வார்கள் எல்லோரும் கிருஷ்ண சைதன்யரைப் போன்றவர்கள் ஆண்டாள் உள்பட.

பக்தர்ளின் சரித்திரங்களிலிருந்தும், அவர்களுடைய வாக்கும் அநுபவமுமாகிய பக்தி சரித்திரத்திலிருந்தும் நாம் அறிந்துகொள்ளும் உண்மைகள் மனித சமூகத்தின் உயர்விற்கும் தூய்மைக்கும் எவ்வளவு இன்றியமையாதவை என்பது அவற்றை ஒருங்கே சேர்த்து ஒரே நோக்கில் பார்த்தால்தான் தெரியும்

தன்னல இச்சையைத் தவிர்த்துச் செயல் செய்வது என்பதுதான் மூலாதாரமான கொள்கை அது நல்ல எண்ணத்தையும் தூய உள்ளத்தையும் ஆதாரமாகக் கொண்டது. அச்செயலே இருவகைப்படும். கடவுள்பால் சொல்வது, மனித சமூகத்தின்பால் சொல்வது. பஜனையும் பரோபகாரம் முதலாமவை; ஆத்மார்த்தமானவை. பின்னது லோகார்த்தமானது.

அந்தச் செய்கையையும் தான் செய்யவில்லை; கடவுளின் கருவியாகக் கடவுளுக்கே செய்வது என்பது மற்றொரு முக்கியமான கொள்கை. யாவும் ஈசன் செயல், அவை அவனைச் சேர்ந்தவை என்று அர்ப்பணம் செய்து மமதையையும் அகங்காரத்தையும அடியோடு புறக்கணிப்பதே இதன் தன்மை

இவற்றின் பலனாக ஏற்படுபவை தாம் உலகத்தை மேன்மைப் படுத்தும் மனித குணங்கள், சுகதுக்கம் முதலிய துவந்துவங்களிலிருந்து விடுபடுவது, அதைதி பெறுவது, மனம், வாக்கு காயம் மூன்றிலும் சுத்தமாகச் சேவை செய்வது. இந்த உத்தமமான பலன்கள் பக்தி மார்க்கத்தின் மூலம் ஏற்படுகின்றன. மனித சுபாவத்தையும் உணாச்சிகளையும் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. அவற்றைப் புனிதப்படுத்தி மாற்றினால், விரிவுபடுத்தினால் போதும்-ஆதி மனிதனின் காலத்தில் இருந்தது போல மறுபடியும் மனிதனுடைய கீழ்த்தரமான உணர்ச்சிகளுக்கு இடமளிக்கக் கூடாது. அவனை உண்மையான மனிதனாக மனிதாபிமானத்தின் வடிவினனாக

ஆக்கிடும் முயற்சியில் தான் ததீசி, வசிஷ்டர் போன்ற நம் பண்டைய முனிவர்களும் ஈடுபட்டு தம் அநுபவ வாயிலாக உபநிடதக் கருத்துக்களுக்கு உத்வேகம் தந்து, தந்நலமற்ற தொண்டுக் காகவே தம்மை அர்ப்பணம் செய்து பரம்பொருளுடன் இரண்டறக் கலந்து சிரஞ்சீவித்தன்மை பெற்றார்கள்.